12th September 1958]

THE HON. SRI R. VENKATARAMAN : அது லிக்நைட்டைப்பற்றி இல்லை. ஹை டென்ஷன், லோ டென்ஷன் இன்ஸுலேட்டர் செய்யும் தொழிற்சாலை மார்ச்சு 31-ல் ஆரம்பிக்கும்.

SRI D. S. AUTHIMOOLAM : இரண்டாவது திட்டகாலத்தில், நெய் வேலிக்கு ஒதுக்கப்பட்ட தொகை எவ்வளவு? அது எந்த அளவில் செல வாகிறது ? முன்னேற்றகரமாக செலவாகிறதா ?

THE HON. SRI R. VENKATARAMAN : ஒதுக்கப்பட்ட தொகை ரூ. 66·90 கோடி. ஆனால் இப்பொழுது ஒதுக்கப்பட்டதைவிட அதிக மாகப் போய்விடும். ரூ. 75 கோடி வரை வேண்டியிருக்கும் என்று மதிப்பிடப்பட்டிருக்கிறது. நல்ல முறையிலே படிப்படியாக முன்னேற்றம் ஏற்பட்டு நடந்து வருகிறது.

MR. SPEAKER : கனம் நிதி அமைச்சர் வந்து விட்டார். ஸ்ரீ தியாகா ராஜன் இப்பொழுது அவருடைய கேள்வியைக் கேட்கலாம்.

*Kallupatti Block Advisory Committee*

*176 Q.—SRI N. R. THIAGARAJAN : கனம் முதல் அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

(அ) சென்ற ஒரு ஆண்டு காலமாக மதுரை ஜில்லா கலெக்டர் கல்லுப் பட்டி ப்ளாக் அட்வைசரி கமிட்டி கூட்டம் தேவையில்லையெனக் கூறி நிறுத்தி வைத்தது சர்க்காருக்குத் தெரியுமா ?

(ஆ) அப்படியானால் இதற்கு காரணம் என்ன ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) & (*b*) **The Collector of Madurai issued no such directions.**

SRI N. R. THIAGARAJAN : கலெக்டரிடம் பேசியதில், அடிக்கடி கூட்டம் கூட்டுவதால், அதிகக் குறைகள் கூறுகிறார்கள். ஆகையால் கூட்டம் கூட்டத் தேவையில்லை என்று வலியுறுத்திக் கூறுகிறார். சர்க்கார் கலெக்டர் அடியோடு கூட்டம் நடத்தத் தேவையில்லை என்று உத்தரவு போட்டிருக்கிறார்களா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : அந்த மாதிரித் தகவல் இல்லை. இந்தக் கமிட்டிகள் எந்த அளவுக்குக் கூட வேண்டுமோ அந்த அளவுக்குக் கூட்ட ஏற்பாடு செய்யப்படும். ஏதோ ஹாஸ்யமான முறையில் அவர்கள் சொன்னதை ஸீரியஸாக அங்கத்தினர்கள் எடுத்துக்கொண்டு புகார் செய்கிறார்களோ என்று பயப்படுகிறேன். முன்பு சில அங்கத்தினர் களை நியமிப்பதில், அரசாங்கத்திலிருந்து உத்தரவு போடத் தாமதம் இருந்தது. இப்பொழுது புதிதாக உத்தரவு போட்டிருக்கிறோம். அதாவது சில அங்கத்தினர்கள் நியமிக்கப்படாவிட்டாலும் இந்தக் கமிட்டிக் கூட்டங் கள் நடக்க வேண்டும் என்று.

SRI T. R. RAMAMIRTHA THONDAMAN : அட்வைசரிக் கமிட்டிக் கூட்டம் கூட்டப்படாத காரணத்தால் திட்ட வேலைகள் குறிப்பிட்ட காலத்தில் முடியாமற் போகுமாதலால் காலத்தை அதிகரிக்க சர்க்கார் முன்வருமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : அப்படிச் செய்ய வேண்டிய அவசியமில்லை. திட்ட காலத்திற்குள், எல்லாக் காரியங்களை யும் செய்ய எல்லா விதமான நடவடிக்கைகளும் எடுக்கப்பட்டு வருகின்றன.

MR. SPEAKER : அடுத்து வரும் 185, 186 இரண்டு கேள்விகளையும் சேர்த்து எடுத்துக் கொள்ளலாம்.

*Ministers' tour*

*185 Q.—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Chief Minister be pleased to state—

(*a*) whether the Hon. the Chief Minister and Hon. the Minister for Public Works undertook any tour of Devikulam and Peermedu taluks of Kerala State in May 1958 at State cost; and

(*b*) if so, the official business transacted during this tour?